சிவராமஜெயம்.

# வள்ளியம்மை அலங்காரம்.

இஃது,

சிறுமணவூர்,

## முனிசாமிமுதலியா

ரவர்களால் இயற்றப்பட்டு,

தமது
சென்னை சூளை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1905.

எமது அச்சுக்கூடத்தில் விற்பனைக்குத்தயாராயிருக்கும்

# புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் ஒஸ்திபதிப்பு | 4 | 0 | 0 |
| சாதாரண பாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இந்தலா [அச்சிலிருக்கிறது] | 4 | 0 | 0 |
| சோதிடசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 8 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| இந்தியன் பீனல்கோட் ராயல் ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| கிராம முனிசிப்கோர்ட் ராயல் கிளேஸ் | 3 | 0 | 0 |
| கிரிமினல்கோர்ட் சட்டம் [அச்சிலிருக்கிறது] | 2 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| உலகவிசித்திரக்கதை ஒஸ்திபதிப்பு | 1 | 0 | 0 |
| விக்கிரமாதித்தன் கதை கிளேஸ் | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள் சரித்திரம் | 0 | 12 | 0 |
| விராடபர்வம் ராயல் 8-பேஜ் லெத்தோபடத்துடன் | 0 | 12 | 0 |
| பட்டணத்தார்புராணம் ராயல் 16-பேஜ் லெத்தோபட | 0 | 12 | 0 |
| பார்வதிபரணியமென்னும் விஷவைத்தியசிந்தாமணி | 0 | 12 | 0 |
| கஷ்டஜாதகம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| சவகண்ட ஆருடம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மூலிகைமர்மம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| திருத்தணிகைச் சன்னதிமுறை திக்கு | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| சிவவாக்கியம் 1000-ம்பாடல்கள் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மனமோகனக்கண்ணாடி கிளேஸ் | 0 | 8 | 0 |
| ஜெகத்தர்ஷா கிளேஸ் | 0 | 8 | 0 |
| புலவுநூல் இந்தியா சமையல்சாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| கண்கட்டுவித்தை | 0 | 6 | 0 |
| டை 2-ம் பாகம் | 0 | 6 | 0 |
| சகாதேவர் சோதிடநா | 0 | 6 | 0 |
| திருநேத்திரசிந்தாமணி | 0 | 5 | 0 |
| பெண்கள் ருதுஜெனனஜாதகம் | 0 | 4 | 0 |
| சர்வபிரயாண சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| வாந்திபேதி நிவாரண | 0 | 2 | 0 |
| சுருக்குபஞ்சபட்சி | 0 | 2 | 0 |
| சைவானுஷ்டானவிதி | 0 | 2 | 0 |
| அவிவேகபூரணகுருகதை | 0 | 1 | 6 |
| விபூதி ருத்திராட்ச மகத்துவம் | 0 | 1 | 3 |

இப்படிக்கு,
திருமணவூர்-முனிசாமிமுதலியார்,
நெ. 12. சட்டண்ணநாயக்கன் வீதி,
சூளை போஸ்டு, மதராஸ்.



உ

கடவுள் துணை.

# வள்ளியம்மை அலங்காரம்.

விநாயகர் துதி

நேரிசைவெண்பா.

கொடியிடையாள்வள்ளி கொடியதவமிருந்து
வடிவேலன்றனை மணர்ந்த வற்புதத்தைப்—படிமிசையான்
அலங்காரமாய்ப்பாட யானைமுகாயென்னுவில்
விலகாமற் குடியிருக்கவெண்.

தெம்மாங்கு.

ஒன்பதுரத்தினமும் உருக்கிவிட்டபதுமையைப்போல்
அன்னநடைவள்ளியம்மை யருந்தபசுபுரிந்திட்டாளே. (நன்று)

அலங்காரம் - ஐயா.

ஆடைநீக்கிஅளகுநீக்கி அணிந்தபணிகள்முளுதும்நீக்கி
வாடைநீக்கிவரிசைநீக்கி வனத்தைநோக்கிமனதுதாக்கி
ஐயா-ஊசிமுனையில்காலைநீட்டி வாசிமுனையில்மனதைப்பூட்டி
சுழியின்முனையில் விழியையோட்டி சுருதிமொழியை மழையாய் [வாட்டி
ஐயா-வருகவருகவடிவேல்வருக
வருகமுருக னருகில்வருக (நன்று)

தெம்மாங்கு.

இப்படியாய்வள்ளியம்மை யிருக்குந்தவக்கொடுமை
முப்புறமும்மூவர்களும் முழித்தல்லவாமிரண்டுவிட்டார் (நன்று)

அலங்காரம் ஐயா.

இந்திரனுலகம்செந்தணல்பரக்க இமையோராதிகள்சமயந்துரக்க
சந்திரசடையன்சிந்தையுந்துடிக்க சதுரமுகனும்மனதுகலங்க

ஐயா.

வாட்டமுற்றதைக்கேட்டுமுருகர் ஒட்டமாக காட்டின்வழியே
காட்டி மயிலைநட்டமாகவே கூட்டுந்தவத்தின்பேட்டியடித்து

அடியே-கொஞ்சம்வயது கொடியதவத்தில்
நெஞ்சிவருந்த விபறமேது (நன்று)

தெம்மாங்கு-

இன்னமணம்புரியவியோ யிளவயதாய்க்காணுதடி-
யென்னகுறைநேர்ந்ததென்று யிப்பேர்ப்பட்டதவமிருக்குறாய் (ந)

அலங்காரம் அடியே

சின்னவயதுசித்தரவடிவு கொஞ்சம்வயதுகுழந்தைபார்வை
யிந்தவயதிலென்னவருத்தம் யிப்பேர்ப்பட்டதவத்தில்பொருத்தம்

அடியே

வாயைத்திறந்துவருத்தம்கூறு வரத்தைவாங்கிபிடத்திற்சேரு
சேயையின்றுசுகமாய்வாழு சாரத்தொல்லையைகடந்துதேறு

அடியே-யெடுவென்கரத்தே பிடிநீவரத்தே
விடுவென்தவத்தே நடவுன்னிடத்தே (நன்று)

தெம்மாங்கு.

ஒன்றுக்குறைவுமில்லை வொருவரமும்வேண்டயில்லை
யென்னைமணம்புரிவீரென்றே யித்தனைநாள்தவமிருந்தேன் (நன்)

அலங்காரம் ஐயா. [ண்டா

ஊரும்வேண்டாம்பதியும் வேண்டாம் ஒருவருறவும்பகையும்வே
பொன்னும்வேண்டாம்பொருளும்வேண்டாம்புகழும்வேண்டாம்

ஐயா [யிகழும்வேண்டாம்

எனக்குமாலைசூட்டவேண்டும் இன்பசுகத்தைக்காட்டவேண்டும்
உனக்குமனைவியாகவேண்டும் உலகம்புகழவாழவேண்டும்

ஐயா-கருத்தையுரைத்தேன் வருத்தம்விடுத்தேன்
பொருத்தம்பிடித்தேன் மாலைமுடித்தேன் (நன்)

தவமிருந்துயென்னையழைத்து தாலிகட்டச்சொல்லுகிறாய்
மகளுறவாய்நேர்ந்துபோச்சே மாலையிடவுங்கூடுமோடி (நன்)

அலங்காரம் அடியே

இந்திரன்மகளென்மனைவியாச்சே யுந்தன்குலமோகுறவராச்சே
யெந்தவிதத்தில்புரியும்பேச்சு உலகஞ்சிரிக்குமிந்தபேச்சு

அடியே

ஏனோமனதில் வருத்தமுற்றாய் இன்னோர்பிறவி யெடுக்கப்போறாய்
மானின்வயற்றிற்பிறக்கப்போறாய் மனதின்கவலைமுடிக்கபோறாய்
அடியே-கொஞ்சனுளே குறையைத்தாளே
வஞ்சிக்கொடியே வருத்தம்சகியேன் (நன்)

தெம்மாங்கு

இப்பிறப்பில்மணம்புரிய யேலாதென்றுசொல்லிவிட்டு
அற்புதமயில்மேலேறி யாண்டவனுந்தணிகைசேர்ந்தார் (நன்)

அப்போ.

கந்தனுரைத்தமொழியையறிந்து கன்னிவிசனக்கடலில்விழுந்து
யிந்தஜெனனமெடுத்தும்பழுது யிருந்ததவமுமொழிந்ததென்று

அப்போ. [ந்தாள்

புரண்டுஅழுதாள் புத்தியைமறந்தாள் உருண்டுஅழுதாள்ஓங்கிவிழு
இருந்துஅழுதாள்யேங்கிவிழுந்தாள் என்னுடஉயிரும்வேண்டாமெ
அப்போ-மோதியடித்தார் முகத்தையிடித்தாள் [ன்றாள்
ஆவிவிடுத்தாள் அண்டம்அடுத்தாள் (நன்)

தெம்மாங்கு.

இங்கேநடந்ததெல்லாம் எம்பெருமாள்தானறிந்து
மங்கையுடனிருவருமாய் மானுருவமெடுத்திட்டாரே (நன்)

அலங்காரம் ஐயா

கன்னிவருத்தமுடிக்கவேண்டி கந்தன்மனதைந்திருத்தவேண்டு
தன்னுடவைகுந்தமதனைத்தாண்டி தைரியலட்சுமிமனதைதூண்டி
ஐயாமானைப்போலவடிவமெடுத்து மாறுவனத்தைதஊறுயடுத்து
மதனும்ரதியும்ரதியும்போலதொடுத்துனிதமுமதனகலவியெடுத்து
ஐயா-உள்ளமகிழ்ந்தார் உறவாயிருந்தார்
வள்ளிக்கொடியில் மகளையீன்றார் (நன்)

தெம்மாங்கு.

வேட்டைத்தொழிலுடைய வேடுவர்களப்பொழுது
காட்டுவழிவருகையிலே கண்டாரேகுழந்தைதன்னை (நன்)

அலங்காரம் ஐயா [ணைத்தார்

வாரியெடுத்து வாயோடணைந்தார் உச்சியைமுகந்து உடம்போட
கனியைப்போலே கடித்துபார்த்தார் கன்னியைப்பொன்னிடஒளி

யோயென்றார்] ஐயோ [டார்
வேட்டையாட் மரந்துபோட்டார் வீட்டைத்தேடி திரும்பிபோட்
கோட்டைபுகுந்து மனைவியழைத்தார் குழந்தை யெடுத்துக்கையி
பார்த்து [லேகொடுத்தார்
தங்கமென்றார் தரளமென்றார்
சிங்கமென்றார் சித்திரமென்றார் (நன்)
தெம்மாங்கு
பிரவியெடுத்தமுதல் பெருமலடிவேடுவச்சி
திருவுருவைவாங்கினதே திரண்டுதையாமார்பிரண்டும் (நன்)
அலங்காரம் ஐயா
அன்னமென்றார்அமுர்தமென்றார் அமரருலகம்ரதியேயென்றார்
பொன்னேயென்றார்பொருளேயென்றார்போதாதிந்தபேர்களென்
ஐயா [றார்
தெள்ளுவனத்தில்திருவைப்போல தேசமயங்கும்கிளியைப்போல
வள்ளிக்கொடியிலிருந்ததாலே வள்ளியென்றுஅழைக்கமேலே
ஐயா-யணிகளளித்தார் பாதுகாத்தார்
யினியதளித்தார் யேந்திவளர்த்தாள் (நன்)
தெம்மாங்கு-வள்ளி
நித்தமொருநிறமாய் நேரிழையாள்தான்வளர்ந்து
புத்தியறிந்தவுடன்புனங்கார்க்க வந்திட்டாளே (நன்)
ஐயா
உத்தமதாதியர் அருகிலிருக்க உயர்ந்தபரணைமீதிற்சிறக்க
சித்திரகவுண்டு கையிலேயிருக்க சிங்காரவள்ளியும்வாயைத்திறக்க
ஐயா
ஆலோஆலோ அன்னக்கிளியே அருகவாங்கவர்ணக்கிளியே
காலப்பயிரேகெடுக்காதிங்கோ கானகமிருக்குபோய்பிழைங்க
ஐயா-காட்டுப்பறவை யோட்டநினைப்பாள்
திட்டிகவுண்டை மாட்டியடிப்பாள் (நன்று)
விருத்தம்.
தன்னிடவுயிர்போங்காக்குந் தாதிமாருடனேவள்ளி
உன்னிதப்பரணைமீது வுயர்வரயிருக்கும்போது

தென்பொதிமலையைத்தாண்டி திருட்டுறைதனுமங்கே
கன்னியின்வருவைப்போலே கைப்படமெழுதலுற்றான்.

தெம்மாங்கு.

பொதிகைமலைகடந்த பின்புறணிறைதனும்
விதிதுலைத்துபோகாமலே வந்துநின்றான் புனத்தருகே. (நன்ன)

அலங்காரம் ஐயா [யோ

அர்ப்புதக்கிளியோ அனங்கன்ரதியோ அமரர்பதியோகுமரர்மதி
அளகிலிவளைப்போலவுலகில் அறியேனறியேனயோசிவனே

ஐயா

சமரபுரியில்வேலன்வடிவும் சரியேசரியேயிவளின்வடிவு
பிரமனெப்படியமைத்திட்டானோபடத்திலெப்படியெழுதவேனோ
வள்ளியை-உத்துப்பார்த்தான் உருதிபிடித்தான்
படத்தையெடுத்தான் பதியத்தொடுத்தான் (நன்)

தெம்மாங்கு.

மேகம்போல்கூந்தலிட்டு மின்னலைப்போல்சுட்டியிட்டு
சோகவர்ணக்கிளிகளைப்போல் சுந்திரமாய்பின்னல்போட்டான்

அலங்காரம் ஐயா

சந்திரன்போலவதனமெழுதி சகலவசியதிலர்தமெழுதி
மந்திரம்போலேசெவிகளெழுதி மயிலைப்போலேவிழிகளெழுதி

ஐயா

குமிழிபோலனுசிகளெழுதி கூவிளம்போலத்திலதமெழுதி
குமிழிபோலஸ்தனத்தையெழுதி சித்தசன்காமரசத்தையெழுதி
ஐயா-ரவிக்கைபிருக்க ஸ்தனங்கள்நெருங்க
கரும்புக்கணையில் அரும்புசொரிய (நன்ன)

தெம்மாங்கு.

ஆலிபோல்வயறெழுதி அரவமெனப்படமெழுதி
சேலையதிற்சேர்த்தெழுதி சித்திரம்போல்சரிகைகோர்த்தான் (ந)

அலங்காரம் ஐயா [தி

கரும்பைப்போலக்கரங்களெழுதி கரத்தில்வளயல்பொருந்தயெழு
விரல்கதோறுமோதிரமெழுதி வெண்டயம்போலக்கன்களெழுதி

ஐயா

வாழைப்போலதுடைகளெழுதி வச்சிரம்போலகணைக்காலெழுதி
புத்தகம்போலபாதமெழுதி பூவைப்போலேவிரல்களெழுதி

ஐயா-தண்டையெழுதி கொலுசையெழுதி
கொண்டைனிரைய மலரையெழுதி (நன்று)

தெம்மாங்கு.

பொன்னுபரணமெல்லாம் பூட்டியெழுதிவிட்டு
மன்மதனும்பின்னிடவே மதனத்தேமல்கலந்துபாட்டான். (நன்)

அலங்காரம் ஐயா [சிரித்தான்

வள்ளிபடத்தையெழுதிப்பிடித்தான் வானவர்பெண்களைநினைத்து
பார்த்துபார்த்துமனதுதுடிப்பான் படத்தையெடுத்துஓடிவருவா

ஐயா ன்

காடுகடந்துசெடிகள்கடந்து கானகவிலங்குமலைகள்கடந்து
வேர்த்துவேர்த்துஓடிவந்தான் விடியுமுன்னமேதனிகைசேர்ந்தா

ஐயா-படத்தைகொடுத்தான் பாதத்தில்விழுந்தான் [ன்
காட்டிகாட்டி காலைப்பிடித்தான் (நன்று)

தெம்மாங்கு.

பன்னிரண்டுகையாலும் படமேந்திவேல்முருகர்
தன்னைமறந்தல்லவா தரையுடனேமூர்ச்சையானர் (நன்று)

ஐயா [ப்பார்

மோகம்பெருகிமூர்ச்சையானர் முழித்துவிழித்துபடத்தைப்பார்
அழைத்துஅழைத்துசலித்துநிற்பார் ஐயோயென்னடிகோபமென்

அடியே [பார்

வாயைதிறந்துவார்த்தைகூறடி வருத்தமிருந்தாலதுவும்சொல்லடி
கோபம்பொருத்துமுகத்தைப்பாரடி கோடிசரணம்தயவுசெய்யடி

அடியே-யிடையூரென்னடி யெடுத்துப்போடடி
தடையிதென்னடி தகுதியல்லடி (நன்று)

தெய்வானைசொல் தெம்மாங்கு.

திருட்டுமுனிநாரதனே தேசத்துக்குண்டிணியே
ஒருகம்பத்திலிரண்டானையை ஒட்டவைக்கவந்தாயோடா

அலங்காரம் அடடா

இல்லாதவார்த்தைகள் முடியாய்ப்போடுகிறாய்
எங்கையோயிருந்து படத்தைக்கொணர்ந்தாய்

தெம்மாங்கு.

கோபம்பெருகிவள்ளி கூப்பிட்டாளன்னார்களை
ஆபத்துவதோயென்று ஆவலுடனேஓடிவாருர் (நன்னு)

அலங்காரம்-ஐயா.

வேடர்வருகும்வேகம்பார்த்தார் வருகுமுன்னமேவீசிபோட்டார்
ஓடிபெழுந்து வேங்கைமரமாய் ஓங்கிவளர்ந்து தழைத்துநின்ருர்

ஐயா

எழுபேருந் தொடர்ந்துவந்தார் எங்களையேதுக் கழைத்தாயென்ருர்
வேங்கைமரத்தின் சொகுசைக்கண்டார் வாளையுருவியேந்திக்கொ
அப்போ [ண்டார்

அண்ணுஅண்ணுமொழியைகேளுமே அருகிலிருந்தால்கிழலைத்தரு
வெட்டவேண்டாம்பொருங்களண்ணு வேரேஒருவர்காணமண்ணு
எவனேஒருவன்வளயல்வித்தான் எடாகோடமாய்பேசிபோட்டா
வுங்களையவனும் பார்த்துபோட்டான் ஒடியெங்கையோமறைந்து
அண்ணு. [போட்டான்

காட்டேநடங்க காரியம்பாருங்க
அருகிலிருங்க அழைத்தாவாங்க (நன்னு)

தெம்மாங்கு.

தங்கைக்குறிதிசொல்லி தனிவழியேவேடரெல்லாம்
சிங்கம்போலே எழுபேரும் சென்றுவிட்டார் கானகத்தில். (நன்)

அலங்காரம்-ஐயா.

வேங்கைமரமாய் யிருந்தவேலர் வேரேவுருவம் யெடுக்கநினைத்து
தாடிசடையும் தளர்ந்தவடிவும் தாங்கிநடக்க கையிலேகோலும்
ஐயா [கேழ்ப்பார்

விழுந்துவிழுந்து யெழுந்துநடப்பார்வேடரையழைத்து வழியைக்
பழுத்தபழமாய் வுருவுகாட்டுவார் பாதைதெரியலையென்று அழு
ஐயா-வேடர்பார்த்தார் விசனப்பட்டார் [வார்
கூடஅழைத்து கூட்டிவந்தார் (நன்னு)

தெம்மாங்கு.

தளர்ந்தவயதுடைய தம்பிரானைக்கண்டவுடன்
யிளம்வயதுவள்ளியற்கு ஏற்றதுணையாகுமென்ருர் (நன்னு)

அலங்காரம் ஐயா

ஐயாஐயாபெரியவரே ஆறுசுனைகளதிகமுண்டே
யிப்பேர்ப்பட்டகானகத்தில் யெங்கேபோரிர்தனியா நீரே

ஐயா [க்கொண்டே
வார்த்தையிவர்க்குகொடுத்துக்கொண்டே வழியில்மெள்ளநடத்தி
வள்ளியிருக்கும்புனத்தைகண்டே வைத்தார்காவல்பரணையண்டே
ஐயா
ஏழுபேர்க்குந்தங்கையையா ஏற்றதுணைகளில்லையையா
உன்னிடவுயிர்போல்காதுமையா ஒருகுறைவுமேசெய்யாளையா
ஐயா-போயிவாரம் பொழுதுநேரம்
யேதுவேளை வருவம்நாளை (நன்று)

தெம்மாங்கு.

நாடுசடைநிறைந்த தள்ளாக்கிழவனுக்கு
வேடிக்கையைகாட்டிகாட்டி வேளைதோறும்பசியைத்தீர்ப்பாள்
அலங்காரம் ஐயா
வலையைவீசிகிளிகள்பிடிப்பாள் வந்துகிழவன்முன்னேவிடுவாள்
தடியையிழுப்பாள்தாடிபிடிப்பாள் தழுவியணைத்துமுத்தமிடுவாள்
ஐயா
புலிகள்வருதுபாருமென்பாள் போய்பிடிப்போவாருமென்பாள்
தடியைப்பிடுங்கியோடிப்போவாள் தரையில்விழுந்தாலெடுத்துவிடு
ஐயா [வாள்
மேலேவிழுவாள் மெள்ளெனக்கடிப்பாள்
கோலம்புமறிவாள் குறிகிப்படுவாள் (நன்று)

தெம்மாங்கு.

உண்மைக்கிழவனென்று உயிர்போலக்காக்கையிலே
தண்ணீர்வேணுமென்றுசொல்லி தவிக்குறுனே ஆண்டிக்கிழவன்
அலங்காரம் ஐயா
மாவுகொடுத்தாதிங்கமாட்டான் மறைபடைக்குதென்றுவிழுவான்
வாயைகுளறிதண்ணிரென்பான்வள்ளியேஉயிருபோகுதென்பான்
அடியே [ன்
பாவியேண்டிகொல்லுறுயென்பான் பறணைமீதுசாகுறேனென்பா
கூவியழைத்துதண்ணீரென்றான் குருகிபடுத்துமூர்ச்சையானான்
ஐயா-பேச்சியற்றான் பிசகலற்றான்
மூச்சியற்றான் மோடிசெய்தான் (நன்று)

தெம்மாங்கு.

பாவிகிழவனாலே பழிகள்வந்துநேருதென்று
தாவியேபுனங்களெல்லாம் தண்ணீர்தேடியலைந்திட்டாரே (நன்)
அலங்காரம் ஐயா.
வனங்கள்முழுதும்அலைந்தேனையா வஞ்சிக்காதும்சோர்ந்தேனையா
புனங்களெல்லாம்திரிந்தேனையா பொட்டுஜலமும் கிட்டாதையா

ஐயா [யா
சுனையிலேஜெலங்கிடைக்குமையா சொல்லும்வார்த்தைகேளுமை
பத்திரமாகவாருமையா பழியில்லாமல்காப்பேனையா
என்று-ஏந்தியணைத்தாள் யிருகப்பிடித்தாள்
சாய்ந்துநடந்தாள் சுனையையடுத்தாள் (நன்னு)
தெம்மாங்கு
வள்ளிஜெலத்தைக்கண்டு வாருமையாசுனையிலென்றுள்
அடி-தள்ளிவிடநினைக்குறுயோ தந்திரங்களறிவன்போடி (நன்னு)
அலங்காரம் ஐயா [ல்நுழைந்தான்.
வள்ளியைக்கரையில் நிருத்திபோட்டான் வரட்டுக்கிளவன் சுனையி
கள்ளங்கபடும் மனதில்நினைத்தான் கணபதிதன்னை வேண்டிக்கொ
அடடா [ண்டான்
அண்ணுஅண்ணு கணபதியே அடியேனுக்கொரு வுதவிசெய்யே
வெள்ளையானைபோல் துரத்திவாயேவள்ளியையென்னுட னருகில்
அடடா உனக்கு [சேரே
வயறுநிறைய கடலைசுண்டல் வாழைகுலையுந் தேங்காயிளநீர்
பயருவுருண்டை தயிருமோரு பாலும்பழமும் அவலுங்கடலை
ஐயா உனக்கு,
பாங்காய்த்தருவேன் பசியைத்தீர்ப்பேன்
தாங்கவரியே ஓங்கித்துரத்தே (நன்னு)
தெம்மாங்கு.
தம்பிநினைத்தவுடன் தாமிசங்கள்செய்யாமலே
கும்பமதயானைபோல கூச்சலிட்டுஒடிவாரான் (நன்னு)
ஐயா
கண்டுஅலறிகூச்சலிட்டாள் கையைவிரித்துவோடிவந்தாள்
பண்டாரமெந்தனைபாருமென்றன் பறந்துமேல்விழுந்துபிடித்தாள்
அடடா
ஐயாஐயாஅபயமையா அடியாளெந்தனைகாருமையா
கையுங்காலும்துடிக்குதையா காட்டானைமிரட்டுதையா
ஐயா
வெள்ளையானைதுரத்துதையா விட்டுவிட்டுநீபோகாதையா
பெண்ணின்முகத்தைபாருமையா பழிகளுனக்குநேருமையா
யென்று-கட்டிப்பிடித்தாள் கண்ணீர்விட்டாள்
கிட்டிபிடித்தாள் கிலேசப்பட்டாள் (நன்னு)
தெம்மாங்கு.
கட்டிப்பிடித்தவுடன் கணபதிக்கிசைகைபண்ணி
சித்திரமயில்மேலேறி சிங்காரமாய்த்தோன்றினுரே (நன்னு)
அலங்காரம் ஐயா
ஆறுமுகமும்பன்னிருகரமும் அழகுவேலும்அணிந்தநீரும்
பாரமபிலும்பருத்தவடிவும் பாதசிலம்பின்ஓசையொளியும்

உன்னிடகுலத்து தொழிலேகாட்டுருய்
ஒருவர்குடியை ரெண்டாய்பிரிக்குருய்
அடடா-குண்டுணியுனக்கு யிதுவேதொழிலா
கூட்டிகொடுக்க வெழ்க்கமில்லையா
தாடியுஞ்சடையும் உனக்குயேதடா
தாடையில்போடுவேன் வெளியேநடடா.

அடடா-யுனக்கு நறைத்தும்போச்சே நாளுமாச்சே
திருட்டுப்பேச்சே குடியாய்ப்போச்சே. (நன்று)

நாரதன்சொல் தெம்மாங்கு

ஒன்றுமறியேனம்மா வொருகுடியுங்கெடுக்கவில்லை
சென்றுவந்தவழிகளிலே கண்டதைநான்சொன்னேனம்மா. (நன்)

அம்மா.

பொதிகைமுதலாய் மலைகளெல்லாம்பார்த்துபார்த்துதவத்திலிருக்
பதினுலுலகந் தேடித்தேடி பாதைவழியாய் வந்தேனம்மா [க

அங்கே.

சித்திரச்சாலையும்சந்தனச்சோலையும் பத்தரைமாத்து படிகத்துறை
அன்னக்கிளிகள்அமர்ந்தபுனமும் ஆருமறியாபூங்காவனமும்[யும்

ஐயா வழியில்பார்த்தே வந்துவுரைத்தே
பழியைத்தீர்த்தே பாதம்புடித்தே. (நன்று)

தெம்மாங்கு,

வேடனைப்போல்வடிவெடுத்து வேல்முருகரேதுசெய்தார்
ஜாடைசொல்லிநாரதனை தந்திரமாயழைத்துகொண்டார். (நன்று)

அலங்காரம்-ஐயா.

குண்டுணிநாரதன் முன்னால்நடக்க குமரவேடன் பின்னால்நடக்க
கண்டவனத்தை திரும்பிபார்க்க கந்தர்மனது வள்ளியைநோக்க

ஐயா. [கொண்டு

வள்ளிவள்ளியென் றழைத்துகொண்டு வழிகள்தோறும் பார்த்துக்
களினவனத்தைதேடிக்கொண்டு நடக்கமனமும்சகித்துக்கொண்டு

ஐயா-புனத்தைக்கண்டார் பெண்ணேயென்றார்
வனத்தைக்கண்டார் வள்ளியென்றார். (நன்று)

சுப்பிரமணியர்சொல் தெம்மாங்கு,

வஞ்சியிளங்கொடியே வளரும்மூன்றும்பிறையே
கொஞ்சும்பிளங்கிளியே கொல்லுதடிகாமபாணம். (நன்று)

அடியே.

காமரதியே கனகக்கொடியே காய்க்கும்வடிவே பூர்க்கும்வயதே
தேமலொளியே திருவினுருவே தெய்வலோகவருணக்கிளியே.

அடியேயுன்னை.

வனத்தில்விட்டபாவிகளாறு வஞ்சனைசெய்ததெய்வமுங்கூறு
யிந்தவயதில் ஒண்டியாயிருக்க எப்படியுனக்கு மனமும்வந்தது.

அடியே

காமமீருதே கவலையாகுதேகாமன்கணைகள்மாறில்லைதக்குதே[தே
தேமல்முலைகளென்னைபார்க்குதேதிருவுமுன்னிட முகத்தில்நிற்கு
அடியே. [வியே

அஞ்சனவிழியேஅமுர்தமொழியேகொஞ்சுங்கிளியேகோர்த்தமல்
சஞ்சலமொழிய சைகசொல்லடி சனுதிபரணை யேறிவாரேண்டி
அடியே-தாமதமென்னடி தயவுசெய்யடி
காமனைவெல்லடி கட்டிச்சேரடி. (நன்று)

ஆறுடைய கற்பழிய அனியாயம் செய்தேனையோ
தாறுமாறுயென்னையிப்போ தனிவழியில்யேசுறுனே. (நன்று)

அலங்காரம்-ஐயா.

ஐயோஐயோ ஆதிசிவமே அட்டபுவனம் உண்டபொருளே
கைகளீரா றுடையமுருகா காலகாலனீன்றபாலா

ஐயா,

மருதைவீரா மாடன்முனியா விரதமிருக்கும் வீட்டுக்காளி [ன்
தொட்டியசின்ன திறையகருப்பா துஷ்டனெவனோதள்ளிவிழுறு

ஐயா.

இந்தவிதியும் நேர்ந்துபோச்சா யென்னுடவிரத மழிந்துபோச்சா
கற்புஅழிய காலமாச்சா காற்குந்தெய்வம் விலகிப்போச்சா

ஐயா.

கன்னிதவத்தி லென்னகுறைவு
என்னைபழிக்கப் பார்த்திருக்குறீர் (நன்று)

தெம்மாங்கு,

மாதுவருந்தமுற்று மார்புருளத்தானழுவே
வேதனைகள்நேர்ந்ததென்று வேறேயொருவடிவெடுத்தார். (நன்)

ஐயா.

வளையல்சுமையைத்தோளிலிட்டார் வள்ளிபரனுக்கருகில்வந்தார்
வளையல்விற்கிறசெட்டியைபோல வளையல்வளையல் வளையலென்
ஐயா. [ட்டார்

வளையலென்றமொழியைக்கேட்டாள்வள்ளியும்பரணைபிரங்கிபோ
அருகிலழைக்கதாதியைவிட்டாள்அடுத்தவுடனேவிலையைகேட்டா
ஐயா-தேனுந்தினையும்தருவுமென்றாள்
காணும்வளயிலிடுவுமென்றாள் (நன்னு)

தெம்மாங்கு.

தேனுந்தினைமாவும் தின்னபாசியில்லையடி
மானேயென்போகந்திர மருவிருந்தாபோதுமோடி (நன்னு)

அலங்காரம்-அடியே.

ஒன்பதுரத்தின மிழைத்தவளையல் உந்தனுக்கேத்த சந்திரவளையல்
முத்துவளையல் மோகனவளையல் மூன்றுலோகமும்மதிக்கும்வளை
அடியே. [யல்.

யிந்திரவளையல்மந்திரவளையல்இமையோராதிகள்மயங்கும்வளையல்
செந்திபில்முருகன் செய்தவளையல் சிவகாமிமருமகளின்வளையல்
அடியே-விலையைக்குறித்து விசனம்வேண்டாம்
வளையல்குறித்து வருத்தம்வேண்டாம் (நன்)

தெம்மாங்கு.

பிச்சைக்கிவந்தபையல் பெண்டாளஅழைத்ததுபோல்
கொச்சைமொழிபுரைக்கவந்தாய் கொடுத்திடுவாய்யெமனுக்குயிர்
அலங்காரம்-ஐயா. [ப்பார்

அறிகிலண்ணமார் காவலிருக்குறார் ஐயோஉன்னிட வுயிரைப்பரி
பெண்டுபிள்ளைகளிருந்துதானால் போயிபார்த்துபிழைத்துபோடா
ஐயோ-இந்தவயதி லிறக்கநாளா ஏனேதனியே மாண்டுபோறாய்
வந்தவழியே நடந்துகூடு வனத்தைவிட்டுநீ அப்புரம்ஓடு
அடடா-பிரந்தமனையை போயிசேரு
பிரவிபிருந்தா போயிபாரு (நன்னு)

வேலவரைக்

முருகரழகை பார்த்துபார்த்து மோகக்கடலில் வள்ளிவேர்த்து
ஆறுமுகமே அமர்ந்தபொருளே அடியாளெந்தனை சோதித்தாயே

ஐயா யென்றுமயங்கி ஏக்கமிட்டாள்
நின்றுமயங்கி நிலையைமறந்தாள்

தெம்மாங்கு.

இதுதான் சமயமென்று யெடுத்தணைத்து வேல்முருகர்
ஆவலெல்லாந்தீர்த்துக்கொண்டு அன்னமேநான்போரேனென்றார்

அலங்காரம்.

ஆறுமுகத்தின் வடிவைக்கண்டாள் ஆனந்தமா யேங்கிநின்றாள்
வேரேநினைவு மரந்துபோட்டாள் விரகமூர்ச்சை யாகிநின்றாள்.

ஐயா

எனக்காயித்தனை வடிவுகொண்டீர் ஏழைமனதை சோதித்தீர்கள்
கொண்டகருத்தை முடித்துக்கொண்டீர் கூசாமலேபோரேனென் [றீர்

ஐயா ஞாயமல்லவே நடுவுமல்லவே
மாயமந்திரஞ் செய்திட்டீரே. (நன்னு)

தெம்மாங்கு

சத்தியமாய்நாளையிங்கு சரசமாடவருவேனென்று
சுத்திருக்குங்கானகத்தில் சென்றார்முருகர்வேடர்முன்னே.

அலங்காரம்

பஞ்சாங்கத்தை கையிலெடுத்தார் பார்ப்பானைப்போல் வடிவெடுத் [தார்
அஞ்சாமலேவேடரெதிரே ஐயர்போலே வருகிறாரே

அடடா

வனத்திலிங்கே ஆரும்பிள்ளாய் வருகுங்கெதியை கேளும்பிள்ளாய்
ஏழுபேர்க்கும் யிளையமாது யிருப்பதுண்டா வள்ளியென்று

அடடா

கந்தனென்கிற கன்னக்காரன் கன்னிசிறையை யெடுக்கவருவான்
நாளைபொழுது பாதியிரவில் நடக்கப்போர சேதியுரைத்தேன்

அடடா. குகையிலிடுங்க கதவைபோடுங்க
ஏழுபேருமா காத்திருங்க (நன்னு)

தெம்மாங்கு.

திருட்டுபஞ்சாகமதை தீரமுடன்சொல்லவிட்டு
சிறையெடுக்குங் கள்ளனைப்போல சுப்பிரமணியர் வடிவெடுத்தார்

அலங்காரம்

ஐயருரைத்த கட்டளைபோலே அழகுவள்ளியை குகையிலிட்டார்
ஏழுபேருமாய்சுத்தியுருவி யேமாறுமலே காத்திருந்தார்

அப்போ [கொண்டார்
திருடனைப்போல் வடிவெடுத்தார் திருட்டுக்கந்தனும் னெருங்கிக்
கிருநீரெடுத்து வோதிப்போட்டார் தேவிவள்ளியைதூக்கிகொண்
அப்போ. [டார்
குகையைவிட்டுகடந்துவந்தார்கூச்சலிட்டிவர் மூர்ச்சைதெளிந்தார்
தெரிந்துவழியில் மடக்கிக்கொண்டார் திருடனென்ற வெட்டவந்
அப்போ தார்
பஞ்சாட்சரத்தை யோதிவிட்டார் படுக்கமூர்ச்சையாக்கிவிட்டார்
அஞ்சிவள்ளியுங் காலில்விழுந்தாள் அண்ணமார்களை யெழுப்புமெ
அப்போ. [ன்ருள்

மூர்ச்சைதெளிய மொழிகளுரைத்தார்
வாழ்த்தியெழுப்பிவரத்தைக்கொடுத்தார். (நன்ற)

தெம்மாங்கு.

கைகட்டிவாய்புதைத்து கந்தருடன்யேதுசொல்வார்
மெய்யையறியாமலே வேதனைகள் நினைத்தோமையா. (நன்ற)
ஐயா. [ணுமா
வள்ளியைக்கேட்டா தரவுமாட்டாமா வனத்திலிப்படி வரவும்வே
எங்களைசோதிக்க னேரமாகுமா யேனேயித்தனை கோலமாகுமா
ஐயா.
ஏதுகுறைகள் செய்தபோதும் எல்லாம்பொருத்து அறுளைதாறும்
சூதும்வாதும் அறியமாட்டார் சோதனைக்கெதி ராகமாட்டார்
ஐயா. அபயமென்ருர் அஞ்சிநின்ருர்
விபரமென்ருர் வேண்டிக்கொண்டார்

தெம்மாங்கு

வள்ளியுட அண்ணனுக்கு வாழ்த்தி வரங்கொடுத்து
புள்ளிமயிலேறி யல்லோ போயமர்ந்தார் தணிகைமலை. (நன்ற)

அலங்காரம்.

வேலும்வாழி மயிலும்வாழி வனத்துவேட ரெத்திவாழி
இந்திரனீன்ற தெய்வானை யெந்தனுளும் சுகமாய்வாழி
ஆறுமுகத்துகடவுள்வாழி அண்டரண்டமேழும்வாழி
பாடிபடித்து பதமுறைத்தோர் பலத்தகுடியாய் பெருத்துவாழி
ஐயா. மண்ணும்வாழி விண்ணும்வாழி
மதியும்வாழி ரவியும்வாழி. (நன்ற)

வள்ளியம்மை அலங்காரம்

முற்றிற்று.

---